Regd. No. M. 3978. [விலை காலணா.

# "அம்ருதலஹரீ"

## கோயில் அநுபந்தம்

## "AMRUTALAHARI"—TEMPLE SUPPLEMENT.

நெ. 5 ] ஸ்ரீரங்கம், 4—2—1940. [ ஞாயிறு
ப்ரமாதி-௵ தை-௴ 22-உ

## அறிவிப்பு.

இப்பவும் இதுகாறும் நமது பத்திரிகைகளில் வெளிவந்த கோயில் விஷயங்கள் யாவையும் அன்பர்கள் அனைவரும் கண்டு களித்திருப்பர்கள். உண்மை எது? உண்மையல்லாதது எது? என்பதை உண்மையான விவேகிகளே நன்கறிவார்கள். இப்படியிருக்க, ஸ்வபாவத்தினாலேயோ, அல்லது ஏவலினாலேயோ திருச்சியிலிருந்து வெளிவரும் ஓர் அற்பப் பத்திரிகை தனக்கு சம்பந்தமில்லாத விஷயங்களில் ஆழம் தெரியாமல் காலிட்டுக்கொண்டு அலறுகின்றது. அதற்கு சவுக்கடி சிறிது கொடுக்க வேணுமென்று இப்பத்திரிகையிலேயே பதிலும் சிறிது எழுதப்படுகிறது. கோயில் விஷயங்கள் இன்னும் ஏராளமாகவிருப்பினும் இடையிலேற்பட்டதையும் களைந்தெறியவேண்டுமென எழுதப்படுகிறது.

---

## ராணுவார் செலவு.

கோயில் பக்ஷணங்களை அதிகாரி இஷ்டப்படி தானும் சாப்பிட்டு தனக்கு வேண்டியவர்களுக்கும் சாப்பிடக் கொடுத்து தேவஸ்தானம் கணக்கிலேயே எழுதுவதற்கு ராணுவார் செலவென்று ஸ்ரீரங்கம் தேவஸ்தானத்தில் பெயர். ஐந்து தர்மகர்த்தாக்கள் இருந்த காலத்தில் ஆன ராணுவார் செலவைவிட ஒரு ஆபீஸர் இருந்து நிர்வஹித்து வரும் தற்காலத்தில் இந்தச் செலவு ஐந்தில் நான்கு பங்கு குறைய வேண்டியது நியாயமல்லவா? ஆனல் மிகவும் அதிகமாகச் செலவு நடப்பதாகவே கேள்வி.

## வேலைக்காரன் வருமானத்துக்கும் ஆபத்து.

மார்கழி திருநாளில் ஒவ்வொரு நாளும் எல்லா கைங்கரியபார்களுக்கும் திருப்பணியாரம் கிடைக்குமாறு நெடுநாளாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இவ்வருஷம் இந்த வருமானம் வெகுவாகக் குறைக்கப்பட்டு யார் யாருக்கோ எங்கெங்கோ பிரஸாதம் அனுப்பப்பட்டு கைங்கரியபரர்கள் கைவிடப்பட்டார்களென்று தெரிகிறது. இப்படிச் செலவு செய்தும் போதாமல் ராணுவார் செலவு தலைக்கு மேல் ஓடுகிறதாம்.

## நெய் விலை.

முதலில் இளம் பதமாகக் காய்ச்சி டின்னில் அடைத்து ஒரு வாரம், பத்து நாள் கழித்து நன்ருகக் காய்ச்சி உபயோகிக்கக் கூடிய பட்டி நெய் இந்தப் பசலி ஆரம்பத்திலிருந்து விசை ரூ. 1—12—0 க்கு மேல் ஏறவில்லை. இப்படி யிருக்க, தேவஸ்தானத்துக்கு டெண்டர் வாங்கி தீர்மானித்திருக்கும் நெய்யின் விலை ரூ. 1—15—6. வெண்ணை காய்ச்சின நெய்க்கு சமமாயிருக்க வேணுமென்கிற உத்தேசத்துடன் அணு $3\frac{1}{2}$ அதிகமாக விலை ஏற்பட்டிருக்கிறதென்று வைத்துக் கொண்டாலும் தினந்தோறும் பக்ஷணத்துக்கும் பொங்கலுக்கும் உபயோகப்படும் நெய் ரூ. 1—12—0 விலையுள்ள நெய்க்கும் மட்டமாயிருக்கையில் ரூ. 1—15—6 எப்படி கொடுக்கப்படுகிறது?

## கோயிலில் பூட்டு உடைக்கப்பட்டது!

டாக்டர் ராஜன் ஆட்சியின் அந்தியகாலத்தில் அரங்கன்



ஆலயத்துக்கு அட்வைஸரி கமிட்டியைப் பிறப்பித்து அதிகாரமில்லாமல் திண்டாடவைத்து எக்ஸிக்யூடிவ் ஆபீஸரின் அலக்ஷியத்துக்கு ஆளாக்கிவைத்த கதை நம் வாசகர்களனைவர்க்கும் ஞாபகமிருக்கும்.

ஆபீஸர் சொல்லியனுப்பும்போது அட்வைஸரி கமிட்டி சேர்மன் சாவிகளைத் தூக்கிக்கொண்டுவந்து காத்திருக்கவேண்டியது ஒரு முக்கியமான வேலை. அட்வைஸரி கமிட்டி மெம்பர்கள் மூவர். அதில் ஒருவராகிய ஸ்ரீ. மாத்ருபூதமய்யர் சேர்மன்; மற்றை யிருவர்கள் ஸ்ரீ. கே. வி. ஸ்ரீனிவாஸ அய்யங்காரும், ஸ்ரீ. பொன்னம்பல கவண்டருமாவர். கோவில் சாவிகளில் சில முக்கியமானவை அட்வைஸரிகமிட்டி சேர்மனிடம் இருக்கவேண்டுமென்றும் அவசியமானபோது ஆபீஸரின் வேண்டுகோளின் பேரில் சேர்மன் தாமே நேரகவோ அல்லது தம்முடைய ஆள் மூலமாகவோ சாவிகளைக் கொடுத்துத் திறந்துவிட்டு காரியம் முடிந்த பிறகு சாவிகளைக் கொண்டுபோக வேண்டியதென்று எண்டோமெண்டு போர்டார் விதித்திருக்கிறார்கள். இதன்படியே ஐப்பசி, கார்த்திகை, மார்கழி ஆகிய மூன்று மாதங்களும் கோயில் காரியங்கள் தகராறு இல்லாமல் நடந்தன.

ஸ்ரீ. மாத்ருபூதமய்யர் தம்முடைய சேர்மன் பதவியை ஸ்ரீ. கே. வி. ஸ்ரீனிவாஸய்யங்காருக்கு ஒரு மாதத்துக்கு டெலிகேட் செய்து, சாவிகளையும் அவரிடம் அனுப்பி, இவ்விஷயத்தையும் எக்ஸிக்யூடிவ் ஆபீஸருக்கும் எண்டோமெண்டு போர்டாருக்கும் தெரிவித்துவிட்டாராம். நம் ஜில்லாவிற்குத் தற்காலம் புதிதாக கலெக்டராய் வந்திருக்கும் பெட் துரையவர்கள் 27-1-40உ கோயிலுக்கு வருவதாக இரண்டுநாள் முன்னதாகவே தெரிவித்திருந்தார். கலெக்டருக்குத் திருவாபரணங்களைக் காட்டுவதற்காக 27-1-40உ சாவிகளைக் கொண்டுவரவேண்டுமென்று சேர்மனுக்கு தேவஸ்தானத்திலிருந்து கடிதம் போயிற்றும். கடிதத்தில் வாசகம் மரியாதையாயில்லை யென்றும், ஆபீஸருக்குப் பதிலாக கையெழுத்திட்டவர் இன்னரென்று அறிய முடியவில்லை யென்றும், சாவி கொண்டுவரும் நேரம் குறிப்பிடப்படவில்லையென்றும் கே. வி. ஸ்ரீனிவாஸய்யங்கார் முன்னதாகவே பதில் எழுதியனுப்பினராம். அப்படி அனுப்பியும் அவருக்கு தக்க பதில் கிடைக்க

வில்லைபோலும்! 27-1-40உ அவசரமாக வெளியூர் போகவேண்டியிருந்த கே. வி. ஸ்ரீனிவாஸய்யங்கார் சாவியைத் தாமே கொண்டுவர முடியாமலும், கொடுத்தனுப்ப முடியாமலும் கஷ்டப்பட்டு, தாம் கடிதம் எழுதிக் கேட்டதற்கு யாதொரு பதிலுமில்லாததால் தாம் சாவியை அனுப்ப முடியவில்லையென்று கலெக்டருக்குத் தெரிவித்துவிட்டு ஊருக்குப் போய்விட்டாராம். 27-1-40உ உதயம் இருட்டோடேயே தன் மாமியார் வீட்டுக் கலியாணத்துக்காக தூத்துக்குடிக்குப் புறப்பட்டுப்போன எக்ஸிக்யூடிவ் ஆபீஸர் சாவி வராவிடில் பூட்டை உடைத்து திருவாபரணங்களை எடுத்து கலெக்டருக்குக் காட்டும்படியாக உத்தரவு செய்துவிட்டுப் போனார்போலும்! காரியமும் அப்படியே நடந்தது. ஆனால் பெரிய பெரிய மண்டபங்களும் மதிளும் படுகிற பாட்டில் இப் பூட்டு எம்மாத்திரம்?

## கொத்தன் வேலை அல்லது தச்சுவேலை.

மார்கழி உத்ஸவத்துக்குப்பிறகு கொத்துவேலை அதிகமாக நடக்கவில்லை. கட்டடவேலை நின்று போயிற்றேவென நினைத்தோம். அடுத்தார்போல் ஆரம்பமாயிருக்கிறது தச்சுவேலை. 30—1—40-ல் இரண்டு பெரிய பீம்கள் வந்து ஆண்டாள் ஸன்னிதியில் ரம்ப வேலை நடக்கிறது. என்ன வேலைக்கு என்று கவனித்து பின்னிடு தெரிவிக்கிறோம்.

## முயற்சி தளரவில்லை.

சென்ற இதழில் O. S. 357/38 செம்பாகவுள்ள தாவா சிலவு தொகையுடன் தள்ளப்பட்ட விபரம் எழுதியிருந்தோமல்லவா! அந்த தாவாவை மறுபடியும் பைலில் ஏற்றுக்கொள்ளுவதற்காக ரெஸ்டொரேஷன் பிடிஷன் தாக்கல் செய்யப்பட்டு விட்டதாம்.

## அரசன் பெயர்கொண்ட அற்பனின் அலறல்.

சில தினங்களுக்கு முன் தன்னை சிவாஜியாகவே நினைத்துக்கொண்ட ஒரு 'அல்கா'ப்பத்திரிகை நமது பத்திரிகையையும் அனுபந்தத்தையும் கண்டு உண்மையை மறைமுகமாக ஒத்துக்கொண்டு விஷயமில்லாது ஏதோ வாய்வந்தபடியும் கைபோனபடியும் ஏவவி



ஞல் வெறிமயக்கத்தில் பிதற்றியிருப்பதாக நம் நேயர்கள் மூலம் அறிந்துகொண்டோம். யாரால் வரையப்பட்டது என்று கூட தைரியமாக காட்டக் கூச்சப்பட்டு தத்தளித்திருக்கிறது. அநேக ஆப்தர்கள் அவ் 'வல்கா' பத்திரிகைக்கு யாதொரு உத்தரமும் உரைக்கவேண்டாமென்று கேட்டுக்கொண்டதை யாம் அன்புடன் இசையக் கடமைப்பட்டிருக்கிறோம். ஆனாலும் அவ்வாசிரியரும் ஆப்தராதல்பற்றி அவருக்கும் ஒரு நல்லுபதேசம் நல்கவே இது வரையப்பட்டது.

அவ்வுயரிய (?) வியாஸம் யாரால் வரையப்பட்டது என்று காட்ட துணிவு இருந்தாலும் இல்லாவிட்டாலும், அவ்வழகான (?) வியாஸம் அதன் ஆசிரியராலேயே வரையப்பட்டது என அதன் போக்கையும் தன்மையையும் கண்டாலே எளிதில் உணரலாம்.

அவர் சில சமயம் பிறரின் மாய வார்த்தைகளுக்குட்பட்டு அல்லல் படுகின்றதும் எமக்குத்தெரியும்; அவரை அவைகளிலிருந்து அகற்றவேண்டும் என்பதைக்குறித்தும், அவர் தான் கொண்ட நோக்கத்தையும் வேலையையும் புறக்கணித்து தனக்கு ஸம்பந்தமில்லாத விஷயங்களை எடுத்துக்கொண்டு தவறான வழியில் வீண் வசைமொழிகளை உபயோகித்துத் தத்தளிக்கும் வலையிலிருந்து அவரை விடுவிக்கவேண்டியும், எமது காலத்தையும் இடத்தையும் வீணாக்காது கண்யமான முறையில் சிறிது புத்தி புகட்டுகின்றோம். யாம் எவ்வித வீண் வசைமொழிகளுக்கும் பதில் கூற முற்படமாட்டோம்; ஆனால் விஷயத்துடன் வரும் வியாஸங்களுக்கு யாம் எஞ்ஞான்றும் உத்தரமுரைக்கத் தயாராயிருக்கின்றோம். இதுகாறும் எமது கோயில் அனுபந்தங்கள் மட்டில் நான்கு வெளிவந்து வெற்றிபெற்றிருக்கின்றன. இனிமேலும் வருவதற்குக் காத்துக்கொண்டிருக்கின்றன. இவைகள் பலவிடங்களுக்குப் போவதுமன்றி உள்ளூரில் எல்லாவிடங்களிலும், திருச்சியில் முக்கியமான இடத்திலும் கிடைக்கும். கண்களையும் மூளையையும் சிறிது மாராமத்து செய்துகொண்டு பார்த்தால் விற்குமிடம், புறப்படுமிடம், சைன், விஷயம் யாவும் நன்கு புலப்படும். இன்னும் அவர் அபிப்பிராயத்தின்படி ஜர்மனியில்கூட இனி கிடைக்கலாம். ஆகவே அன்னவர் உண்மையான ஆசிரியராக யிருப்பாரேயானால்,

விஷயங்களைச் சரிவர உணரவும் ஆராய்ச்சி செய்யவும் உரிய சக்தியிருக்குமேயானால் அதுவும் தனக்கு ஏதாவது ஸம்பந்தமிருக்குமானால் அவைகளில் வந்திருக்கும் ஒவ்வொரு விஷயங்களையும் ஒன்றன்பின் ஒன்றாக அணிவகுத்து விமர்சித்து பதில் வரைய முற்படவேண்டும். அதுதான் உண்மையான பத்திரிகையின் பெருமையாகும்; ஆசிரியரின் திறமையுமாகும். அதைவிட்டு ஒரு கைக்குள் அடங்கி யிருக்கும் கோயிலிலிருந்து ஏதாவது பிடுங்கவும் வேண்டி சிற்சிறிது காலம் குருடனை செந்தாமரைக்கண்ணனென்று புகழ்ந்து கதறிக் கொண்டிருக்கும் பத்திரிகையாகவே திரியுமானால் பாருலகில் பாமரரும் பரிஹஸிக்கக்கூடிய நிலைமைக்கே பாத்திரமாகும்; யாம் ஆதாரத்துடன் விளம்புமவற்றை இப்படி வீண் வசை மொழிகளால் மறைக்கப் புகுந்தால் அது மறைந்துவிடும் என்ற வீண் ப்ரமமா? அல்லது பயந்து வாளாவிருந்துவிடுவார்கள் என்ற கனவா? உபதேசம் பெறுபவரும் உபதேசகர்த்தாக்களும் அகமகிழ வேண்டாம்; உள்ளங் குளிர வேண்டாம். இதற்காக யாம் சளைத்தோமல்லோம். பனங்காட்டு நரி சல சலப்புக் கஞ்சாது. ஆகையால் இதற்காக விஷயங்கள் நிற்காமல் இன்னும் அதிகமாகவே வருமென்பதை அவசியம் அறிய வேண்டும். அற்ப பாஷையில் பதில் கூற வேண்டுமென்றாலும் அதற்கும் யாம் தயாராகவிருக்கின்றோம். ஆனால் நம் பத்திரிகை அவ்'வல்கா'த்தனத்திற்குச் சிறிதும் அவகாசம் அளிக்காதே! வேண்டாம்; வேண்டாம். இனியாவது தனக்கு சம்பந்தமில்லாத விஷயங்களில் வீணாக தலையிட்டுக்கொண்டு வீண் வசை மொழிகளை யிட்டு தவறான மார்க்கத்தில் சென்று ஓயவேண்டாமென்று ஆப்தான அன்னவருக்கு இறுதியாக யாம் புத்தி புகட்டுகின்றோம்.

## வௌவால் புழுக்கை புழுத்த வாய்.

பழைய நிர்வாஹத்தில் வாயில் வௌவால் புழுக்கைவிழுந்து கொண்டிருந்ததாக ஒரு பத்திரிகை எழுதுகிறது. இப்பொழுது இந்த வாயில் வடையும் தோசையும் விழுகிறது போலும்! ஐந்து தர்மகர்த்தாக்கள் இருந்த பழைய நிர்வாஹத்தை விட ஒரு அதிகாரியாயுள்ள புது நிர்வாஹத்தில் ஊாணுவார் செலவென்னும் காலிப்பட்டாள தீனிச் செலவு ஐந்து மடங்கு அதிகமாயிருப்பது



இம்மாதிரியான வௌவால் புழுக்கை புழுத்த வாய்க்கு இரை போடுவதால்தானே?

## பெருச்சாளிகள்—இரண்டும் ஒன்றே!

நாலைந்து வாரமாக தேவஸ்தான நிர்வாஹத்தைப் பற்றி நாம் வெளியிடுவதை ஒருவரும் கவனிக்கவில்லையோ என்று நினைக்க வேண்டாம் அநுபந்தம் வெளியானவுடன் தேவஸ்தானம், ஆபீஸர், எண்டோமெண்டு போர்டு, கவர்ண்மெண்டு இவ்விடங்களுக்கும் அனுப்பப்படுகிறது. அவசியம் கவனிக்க வேண்டிய ஆபீஸர், எண்டோமெண்டு போர்டு இவர்கள் கவனித்தாலும் கவனிக்காவிட்டாலும் ஸம்பந்தமில்லாத ஒரு பத்திரிகை கவனிக்கத் தலைப்பட்டிருக்கிறது. இவைகளின் கவனிப்பும் பரிவான பிதற்றல்களும் தான் அதிகாரிகளின் கவனிப்பு போலும்! இப்போதுள்ள புது நிர்வாஹத்துக்கு முன்பு பழைய நிர்வாஹத்தில் பல பழம் பெருச்சாளிகள் இருந்தனவாம். அவைகள் இல்லாமல் புது நிர்வாஹ அதிகாரி விரட்டி நன்றாக காரியங்களைக் கவனித்து சீர்திருத்தம் செய்கிறாராம்.

பழம் பெருச்சாளிகள் போகவேயில்லை. புதுப் பெருச்சாளிகளும் பழம் பெருச்சாளிகளாகவே வெகு சீக்கிரத்தில் மாறி விட்டன. புதுப் பெருச்சாளி உத்தியோகஸ்தர்கள் பழம் பெருச்சாளி ஸ்டோர் கணக்கை எவ்வளவு தூரம் சீர்திருத்தம் செய்திருக்கிறார்கள்? பழம் பெருச்சாளி ஸ்ரீபண்டாரத்திலுள்ள கள்ள பக்ஷணங்களையும், அதிக விலையையும் புதுப் பெருச்சாளி அதிகாரி எப்படி சீர்திருத்தம் செய்கிறது? பழம் பெருச்சாளி பணியாரப் போட்டு கலப்பு நெய்யையும் அதிக பக்ஷணங்களையும் புதுப் பெருச்சாளி நிர்வாஹி எப்படி திருத்தி யிருக்கிறது? புதுப் பெருச்சாளியும் பழம் பெருச்சாளியும் சேர்ந்து செய்து கொள்ளும் சாமார்த்தியமாவது: நாமிருவரும் பெருச்சாளி தான்; நீ உள்ளேயே இருந்து பழைய இடங்களையே பறித்துக் கொண்டிரு. புதிதாக வந்த நான் வெளியே மண்டபம், மாளிகை முதலிய இடங்களாகப் பறித்துக் கொண்டு வந்து சுரங்கத்தில் இருவரும் ஓரிடத்தில் கூடி வெளி லாபம் உள் லாபம் இரண்டிலும் கலந்து கொள்ளலாம் — அல்லது நீ உன் காரியத்தைப் பார்; நான் என்

காரியம் பார்க்கிறேன். நீ என்னிடம் வாரதே; நான் உன்னிடம் வரவில்லை — என்று விலகியே யிருக்கலாம். இவ்வளவே யன்றி ஒன்றை யொன்று விரட்டியபாடில்லை.

இப்போது போலவே அப்போதும் வரும்படியாம். இப்போது கோயிலில் ஏராளமாக மராமத்து நடக்கிறது வருமானத்திலிருந்தே — என்று ஒரு பத்திரிகை தற்கால நிர்வாஹத்தைப் புகழ்ந்து எழுதுவது மன்னியில் இப்போது போலவே தானே டிரஸ்டிகள் காலத்திலும் வரும்படி வந்தது; அப்போது ஏன் இப்படி செலவு செய்யவில்லை என்று கேட்கிறது. உண்மையைச் சரிவர அறியாமல் வெளியிலிருந்து சொல்வதைக் கேட்டுக் கடலுக்குப் பாடும் பாட்டு இது. புது நிர்வாஹம் வந்தது முதல் நாளது வரை நடக்கும் செலவு பழைய நிர்வாஹத்தில் சேர்த்து வைத்த பணத்திலிருந்து தான் நடக்கிறதென்பதை அப்பத்திரிகை இப்பொழுதாவது அறியட்டும். பழைய நிர்வாஹத்தில் வந்த வரும்படியை விடப் புது நிர்வாஹத்தில் வரும்படி மிகவும் குறைவுதான். பழைய நிர்வாஹத்திலாவது வருஷாந்தரக் கணக்கு ஒருவாறு வெளியிடப்பட்டது. ஆனால் புது நிர்வாஹக் கணக்குமுழுவதும் ரஹஸ்யமாகவே யிருக்கிறது. பணத்தைச் செலவுசெய்து பகட்டுக்குப் பாடுபடுவதாகப் பெருமை சொல்லிக் கொண்டாலும் நோடிபிகேஷன் ஆகி புது நிர்வாஹம் ஆரம்பித்த 1938, மே ஆரம்பத்தில் பாங்கியில் இருந்த பணம் எவ்வளவு, நாளது தேதியில் இருக்கும் பணம் எவ்வளவு என்று சமீபத்தில் நடக்கும் விசாரணையில் வெளியாகும் போது வெளிப் பத்திரிகையின் புகழ்ச்சி புகலிடமாகாது.

---

“ அம்ருதலஹரீ ”

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயார்த்த ப்ரகாசநப் பத்திரிகை.

[மாதப்பதிப்பு] [வருஷச்சந்தா ரூ. 2-0-0]

“அம்ருதலஹரீ” ஆபீஸ், கீழச் சித்திரை வீதி, ஸ்ரீரங்கம்.

---



---

*Edited, Printed and Published by Pandit S. M. Sundararajacharya at the Sri Vilasam Press, Srirangam.*

